2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 16—2—75 ஞாயிறு மலர்: 14

## தமிழகத்தில் 80 சத மின் வெட்டு

சென்னை, பிப். 15—

தமிழ்நாட்டில் மின்சார நெருக்கடி ஆழமாகி வருகிறது.

மின் வெட்டு 80சதவீதமாக அதிகரிக்கப்படுமாம். தற்போது 60 சதவித மின் வெட்டு அமுலில் உள்ளது.

## வறட்சியால் 20,000 ஏக்கர் நெல் சாகுபடி பாதிப்பு

நாகர்கோவில். பிப். 12—

குமரிமாவட்டத்தில் உள்ள வறட்சியினுலும் தண்ணீர்த் தட்டுப்பாட்டாலும், நெல் சாகுபடி ஆகும் சுமார் 20 ஆயிரம் ஏக்கர் நிலம் பாதிக்கப்பட்டுள்ளது, இம்மாவட்டத்தில் உள்ள இரு அணைகளிலும் தண்ணீர் மிகவும் வற்றிவிட்டது.

பேச்சிப்பாறை அணையின் நீர்மட்டம் 14.63 மீட்டரிலிருந்து ஒரு மீட்டருக்கும பெருஞ்சாளி அணையின் நீர்மட்டம் 23.47 மீட்டரிலிருந்து ஒரு மீட்டருக்கு வற்றிவிட்டது. குடிநீருக்கும கடுமையான தட்டுப்பாடு.

## சுதந்திர நாடுகளை அடிமைகளாக்க வஞ்சக அமெரிக்கா வட்டமிடுகிறது

## சுரண்டலுக்கும் சூறையாடலுக்கும் இந்துமா கடலைக் கலக்குகிறது

# பாகிஸ்தானுக்கு அமெரிக்கா ஆயுத சப்ளை

# இந்திய சர்க்கார் உறுதியாக எதிர்க்குமா?

புதுடில்லி, பிப் 14 —

**இந்துமா கடலில் ராட்சஸ போர்க் கப்பல்களை அனுப்பி இந்தியாவையும் இந்துமா கடலையொட்டிய கடற்கரை நாடுகளையும் பதறடித்து வரும் அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள், இப்பொழுது பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்கி, பதற்ற நிலைமையை மேலும் அதிகரித்து விட முனைந்திருக்கிருர்கள்.**

**பாகிஸ்தானுக்கு மீண்டும் ஆயுத சப்ளை செய்ய அமெரிக்கா முடிவு செய்யுமேயானல், அது இந்திய—அமெரிக்க உறவுகளை சிரமமாக்கி விடும் என்று பிரதமர் இந்திராகாந்தி கூறினர்.**

**பாகிஸ்தானுக்கு முன்னர் வழங்கப்பட்ட ஆயுதங்களெல்லாம் எப்பொழுதுமே இந்தியாவுக்கு எதிராகத்தான்—ஒரு தடவையல்ல, பல தடவைகளில்—பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. எங்கள் நாட்டு இளைஞர்கள் கொல்லப்பட்டிருக்கிருர்கள். ஆத்திர மூட்டல் இல்லாதபோதே, எங்கள் மீது பாகிஸ்தான் ஆக்ரமிப்பு நடத்தியது"—என்றும் இந்திராகாந்தி சுட்டிக் காட்டினர்.**

"நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகை நிருபர்களுக்கு, புதுடில்லியில் வைத்து, பிரதமர்இந்திராகாந்திபேட்டியளித்தார்.

பாகிஸ்தானுக்குஅமெரிக்கா ஆயுத சப்ளை செய்ய முன்வந்திருப்பது குறித்து, இந்திய மக்கள் கடும் கோபம் கொண்டிருப்பதாகவும் பிரதமர் கூறினர்.

### இந்திய-சோவியத் உறவு

இந்திய—சோவியத் உறவுகள்பற்றியும், இந்திய—அமெரிக்க உறவுகள் பற்றியும்பிரதமர் கருத்துக் கூறினர்.

அமெரிக்காவுடன் உள்ள உறவைக்காட்டிலும், சோவியத் யூனியனுடன் கொண்டுள்ள உறவு திருப்திகரமாக இருக்கிறதே, என்ன காரணம்?—என்று நிருபர்கேட்டதற்கு, இந்திராகாந்தி பின்வருமாறு பதில் அளித்தார்.

''காரணம் அனைவரும் அறிந்ததுதான். எங்களுக்கு உதவி தேவைப்பட்ட சமயத்திலெல்லாம் சோவியத் யூனியன் எங்கள் பக்கம் நின்று இருப்பதை நீங்கள் காணவில்லையா?

முதன்முதலில் நாங்கள் நாட்டைத் தொழில்மயமாக்க வேண்டுமென்று விரும்பியபோது, கனரகத் தொழில்களை முதன் முதலாக நிறுவிளங்களுக்குஉதவியவர்கள் சோவியத்மக்கள்தான. யுத்தம ஏற்பட்ட சமயத்திலெல்லாம நாங்கள் இராணுவ உதவி கேட்காமலிநக்கும்போதே அவர்கள் எங்கள் பக்கம் நின்ருர்கள்''—என்று கூறினர்.

### அமெரிக்க உறவு எப்படி?

"இந்தியாவும் அமெரிக்காவும் ஜனநாயக நாடுகளாக இருந்தாலும்கூட, எப்பொழுதுமேஒருவரையொருவர் புரிந்துகொள்ளாமல் இருக்கின்றனவே, ஏன்"—என்று நிருபர் கேட்டார்.

அதற்கு இந்திராகாந்தி பதிலளிக்கையில், "ஆமாம் காரணம் வெளிப்படையானதுதான். அமெரிக்க அரசாங்க நிருவாகிகள் இந்தியாவைப் பற்றி அதிகமாகப் புரிந்து கொள்ளாமலிருக்கிருர்கள். ஜனநாயகத்தைப் பற்றிப் பேசலாம். ஆனல் அமெரிக்கா நட்புறவு கொண்டிருக்கும் நாடுகள் எல்லாமே ஜனநாயக நாடுகள் தானு? ஆனல் இந்த இடத்தில் ஜனநாயகமா, ஜனநாயகம் அல்லவா என்ற பேச்சுக்கு அவசியமென்ன வந்தது?''—என்றும் கேட்டார்.

### உறுதியாக நிற்பாரா?

அமெரிக்க நட்புறவின் லட்சணத்தைப் பற்றியும், பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளை செய்து இந்தியாவுக்கு ஆபத்தை ஏற்படுத்துவது பற்றியும் இந்திராகாந்தி ஓரளவே குறிப்பிட்டிருக்கிருர்.

ஆனல் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் இந்திய சுதந்திரத்துக்கு எதிராகவும், ஆப்பிரிக்க, அராபிய, ஆசிய மக்களுக்கு எதிராகவும் நடத்தி வரும் குழிபறிப்புச் சதிகளையும் ஆக்ரமிப்புச் சதிகளையும் பற்றி வெளிப்படையாகக் கண்டிக்க மறுக்கிருர்.

கடனுக்கும் உணவுக்கும் தொழில் தேவைகளுக்கும்ஏகாதிபத்ய நாடுகளையே-குறிப்பாகஅமெரிக்காவையேசார்ந்து நிற்கும்கொள்கையைக்கடைப்பிடிக்கும்வரையிலும் அமெரிக்க சதித்திட்டங்களைஉறுதியாக எதிர்க்க முடியாது.

இன்று அமெரிக்கா பாகிஸ்தானுக்கு ஆயுதசப்ளை செய்வதை எதிர்த்து வீர கர்ஜனை செய்வதும், நாளை மந்திரி சுப்ரமண்யத்தை அமெரிக்காவுக்குப் பார்சல் செய்து வெள்ளை மாளிகை வாசலில் கடன்கேட்டு கைகட்டி நிற்பதும்—நாளை மறுநாள் இந்துமாகடலை அமைதிமண்டலமாக்கு என்றுகூறி அமெரிக்க எதிர்ப்பு முழக்குவதும, அடுத்த நாளே மந்திரிகள் சவானையும ஜெகஜீவன்ராமையும மூட்டை கட்டிவாஷிங்டனுக்கு அனுப்பி, பணமோ கோதுமையோஏதாவது கடன் கேட்குமாறு சொல்லுவதுமாயிருக்கிருர் இந்திராகாந்தி.

இப்படிப்பட்டவரால் அமெரிக்க ஏகாதிபத்யத்தை எப்படி எதிர்கக முடியும?

### அமெரிக்க ஆபத்து விசுவரூபமெடுக்கிறது

ஜப்பான், ஓகியானு, தென்கொரியா, பார்மோசா, தைவானும் பிலிப்பைன்ஸ் முதல் டியாகோ கார்சியா வரை முப்படைத் தளங்கள் வைத்திருப்பது இந்திராவுக்கு தெரியாதா?

ஆப்பிரிக்க நாட்டு சுதந்திரப் போராட்டங்களை ஒடுக்கி—சுதந்திர அரசுகளைக் கவிழ்த்து—ஆப்பிரிக்கச் சுரங்கங்களையும் காட்டுச் செல்வங்களையும் அபகரிக்கத் திட்டமிடுவது இந்திராவுக்குத் தெரியாதா?

உலகின் 60 சதமான எண்ணெய் உற்பத்தியாகும் பாரசீக வளைகுடாவிலுள்ள அரபு நாடுகளின் எண்ணெய்ச் செல்வங்களை அபகரிக்க கழுகுகள் போல் அமெரிக்க கடற்படைகள் அதிரடித்து வருவது இந்திராவுக்குத் தெரியாதா?

சணலும், ரப்பரும், தேயிலையும் - தங்கமும் வைரமும், தகரமும், மாங்கனீசும், செம்பும், எண்ணெய்ச் செல்வமும் இன்னும் எத்தனையோ இயற்கை வளங்களும் நிறைந்த இந்தியாவையும் இலங்கையையும் பர்மாவையும் மலேசியாவையும் தென்கிழக்காசிய நாடுகளையும் கைப்பற்ற அமெரிக்க ஏகாதிபத்தியக் காட்டுப் பன்றிகள் உறுமிக் கொண்டு திரிவது இந்திராவுக்குத் தெரியாதா?

தங்களுடைய சுரண்டலுக்கும் சூறையாடலுக்கும் உலக ஆதிக்கம் என்ற அரசியல் வஞ்சனைகளுக்கும், அமெரிக்காவுக்கு இன்று இந்து மா கடல் மிகமிகத் தேவையாக உள்ளது.

அதற்காகத் தான் டியாகோகார்சியா தீவை பலம்பொருந்திய அணு ஆயுத தளமாக மாற்றிக் கொண்டிருக்கிருர்கள்.

அதற்காகத்தான் பாரசீக வளைகுடாவின் மூக்கு முனையில் உள்ள மசிரா தீவையும் பிரிட்டனிடமிருந்து வாங்கி, அதில் விமான தளங்களையும் நீர்மூழ்கி கப்பல் தளங்களையும் அமைத்திருக்கிருர்கள். பாரசீகக் குடா நாடுகளிலிருந்து தினசரி 2 கோடி பீப்பாய் எண்ணெய்கள் இந்த மசிரா தீவைத் தாண்டித்தான் செல்ல வேண்டும்.

மத்தியதரைக் கடலில் 6-வது கப்பற் படையைக் கொண்டும், இந்துமா கடலில் 7-வது கடற்படையைக் கொண்டும் அரபு நாடுகளை நெருக்கி, அங்கு அடிமை அரசுகளை ஊன்றி, எண்ணெய்ச் செல்வங்களை உறிஞ்ச அமெரிக்கா திட்டம் தீட்டியிருப்பதையும், இந்த அக்ரமக் குறிக்கோளை அடைவதற்காக இஸ்ரேலை ஏவிவிட்டு போர்த் தீயைப் பரப்பி, அந்தச் சாக்கில் ஊடே புகுந்து இரத்தம் குடிக்க அமெரிக்க—போர்டுகளும் கிசிங்கர்களும் சில சிங்கர்களும் சி ஐ ஏ உளவாளிகளும் வேலை செய்து வருகிருர்கள்.

குழிபறிக்கும் அமெரிக்காவின் இந்தக் கொடூரநயவஞ்சனைகளையும்சூழ்ச்சிகளையும் தகர்த்தெறிய இந்திரா அரசு, உறுதியாக நடவடிக்கை எடுக்குமா?

## தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்

## தமிழகம் முழுவதும் பிப். 10 முதல் 17 வரை

## வறட்சி நிவாரண கோரிக்கை வாரம்

### கோரிக்கை —7

வறட்சிப் பகுதிகளில்—

வாழ வழியற்ற விவசாயிகளுக்கு இலவசமக உணவு தானியம் வழங்க வேண்டும்.

### கோரிக்கை – 8

குடிதண்ணீர் கிடைக்க துரித ஏற்பாடுகள் மேற்கொள்ள வேண்டும்.

### கோரிக்கை 9

உணவு விநியோகத்தையும் நிவாரண வேலைகளையும் கண்காணிக்க மாவட்ட — வட்ட — கிராம மட்டங்களில் மக்கள் கமிட்டி நிறுவப்பட வேண்டும்.

### கோரிக்கை—10

வறட்சி நிவாரண நிதியையும் அரிசி, சோளம், கோதுமை போன்ற உணவுப் பொருட்களையும் கால தாமதமின்றி தமிழகத்துக்கு மத்திய அரசு கொடுக்க வேண்டும.

### கோரிக்கை—11

5 ஏக்கருச்கு உட்பட்ட விவசாயிகளுக்கு கொள்முதலிலிருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும். 5 முதல் 10 ஏக்கர் வரை நிலமுள்ளவர்களிடம் கட்டாயமாக உபரி முழுவதையும் குவிண்டால் ரூ. 74 வீதம் கொள்முதல் செய்ய வேண்டும்.

## 2 ஆயிரம் மாணவிகள் ஆபாச எதிர்ப்பு கிளர்ச்சி

திருப்பதி, பிப். 12—

ஆபாசப் புத்தகங்கள், சினிமாக்கள் மற்றும் விளம்பரங்களை எதிர்த்து இங்குள்ள இரண்டாயிரம்மாணவிகள் தெருக்களில் ஊர்வலமாக வந்தனர்.

முதலாளித்துவ கலாச்சாரத்தின் ஓர் அம்சமான பாலுணர்ச்சியைத் தூண்டும் சினிமாக்கள், புத்தகங்களை எதிர்த்தும்—அவற்றில் பெண்கள் சித்தரிக்கப்படும் முறைகளை எதிர்த்தும்—கல்லூரி மாணவிகள் முழக்கம் எழுப்பினர். கோஷங்கள் எழுதிய அட்டைகளைஏந்திச் சென்றனர்.

கல்லூரி மாணவிகளின் இந்த ஆர்ப்பாட்டத்தையறிந்த பள்ளி மாணவிகளும் வகுப்புக்களைவிட்டு வெளியேறி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

பெண்கள் மட்டும் தனியாக ஊர்வலம் நடத்தியிருப்பது இங்கு இதுதான் முதல் தடவையாகும.

(8-ம் பத்தித் தொடர்ச்சி)

கோஷ்டிகளுக் கிடையேயானதாகும.

ஒன்று, கட்சி ஸ்தாபனத்துக்கு ஆதரவானது. மற்ருென்று, காங்கிரஸ கட்சியின அமைச்சர்க்ளுக்கு ஆதரவானது.

மலப்புரத்தில் 13ந் தேதி நடந்த தேர்தல் மோதலில் முடிந்தது.

கள்ளிக்கோட்டை இளைஞர் காங்கிரஸ் கமிட்டிக்கு தேர்தல் நடத்தக்கூடாது என்றுபோலீஸ் தடைவிதித்திருந்தும்கூட அங்கு தேர்தல் நடந்ததால் மோதல்ஏற்பட்டது.

இந்த மோதலில் பலர் இரத்தக் காயம் அடைந்தனர்.

## மோதல் — அடிதடி குமுறல்

## இந்தியா முழுவதும் காங்கிரசில் புரையோடியுள்ளது

ஆளும் காங்கிரஸ் கட்சிக்குள் நெருக்கடி-உள்ளே இருந்தும், வெளியேயிருந்தும—தீவிரமாகிறது. எங்கு பார்த்தாலும் கோஷ்டிச் சண்டை புரையோடிக் கிடக்கிறது. அடிதடிகளும், மோதல்களும், குமுறல்களும மலிந்து கிடக்கின்றன.

நாள் தோறும்—செய்தித் தாள்களைப் புரட்டிப் பார்த்தோமானல் 'இந்திரா காங்கிரஸ் கட்சிக்குள் தகராறு' என்ற செய்தி இல்லாத பக்கமே இல்லை என்ற அளவுக்கு உள்கட்சி மோதல்கள் நிகழ்கின்றன.

உதாரணமாக இன்றைய (14—2—74) 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் மட்டும் வந்துள்ள செய்திகளைக் கீழே தருகிருேம்.

### மகாராஷ்டிரா

மகாராஷ்டிராமாநிலத்தில் ஏற்பட்ட கோஷ்டித் தகராறைத் தீர்க்கும் மருந்தாக—இங்கு தலைப்பாகை மாற்று வேலை நடத்தப்படுகிறது.

மாநில காங்கிரஸ் கமிட்டி தலைவர் பி. கே. சாவந்த் மற்றும் 4 மாநில அமைச்சர்கள் டெல்லியில் காங்கிரஸ் தலைவர்களை 12ந் தேதி சந்தித்து மகாராஷ்டிர முதலமைச்சரை மாற்ற வேண்டுமென்று வற்புறுத்தினர்.

அதைத் தொடர்ந்து இதுவரை முதலமைச்சராக இருந்து வரும வி. பி. நாயக்குககு கல்தா கொடுத்துவிட்டு, விவசாய அமைச்சராக உள்ள சங்கர்ராவ் சவாணைக் கொண்டுவர மேலிடத்தில்முயற்சி நடக்கின்றது.

### பீகார்

பீகார் சட்டசபை காங்கிரஸ் கட்சிக்குள், முதலமைச்சர் கபூருக்கு இருந்த எதிர்ப்புதீவிரமாகியுள்ளது.

மொத்தமுள்ள 255 சட்டசபை காங்கிரஸ் உறுப்பினர்களில் 162 பேர், பீகார் முதலமைச்சர் கபூர் பாய் மீது நம்பிக்கையில்லைஎன்று கட்சிக்கு 13ந் தேதி இரவில் தந்திகளை அனுப்பியுள்ளனர்.

பதவியைவிட்டு விலகு, அல்லது நம்பிக்கை ஓட்டு பெறு என்று மிஸ்ரா ஆதரவு கோஷ்டியினர் வற்புறுத்தியுள்ளனர்.

தனது பதவியைத்தக்க வைத்துககொள்ள கடந்த 3 நாட்களாக உண்ணுமல் உறங்காமல், தனது ஆதரவாளர்களிடம் கையெழுத்து இயக்கம் நடத்தி வருகிருர்.

### கேரளாவில்

கேரளப் பிரதேச இந்திரா காங்கிரசுக்குள்ளும் மோதல் தீவிரமாகியுள்ளது.

ஊழலும், அதிகார துஷ்பிரயோகமும் செய்வதாக போலீஸ் அமைச்சர் கருணாகரனுக்கு காங்கிரஸ் கட்சிக்குள் கடும் எதிர்ப்புக் கிளம்பியுள்ளது. இளைஞர் காங்கிரசும, மாணவர் காங்கிரசும் கருணாகரனுக்கு எதிராக போர்க்கொடி தூக்கியுள்ளன.

இதிலிருந்து சமாளிப்பதற்காக கருணாகரன் டெல்லிக்குப் விமானமூலம் ஓடியுள்ளார்.

இம்மாநிலத்தில், நடந்து வரும் ஸ்தாபனத் தேர்தல்களில் அடிதடியும் குடுமிப்பிடிச் சண்டையும் நடககின்றன.

### காங்கிரசுக்கும் இளைஞர் காங்கிரசுக்கும்

மலப்புரம் வட்டார இளைஞர் காங்கிரஸ் கமிட்டிக்கு கடந்த புதன் கிழமையன்று நடந்த தேர்தலில் பெரும் கலவரத்தில் முடிந்தது. காங்கிரஸ் ஊழியர்களுக்கும் இளைஞர் காங்கிரஸ் ஊழியர்களுககும் இடையே நடந்த மோதலில், ஒருவருக்கொருவர் செம்மையாக அடித்துக் கொண்டனர்.

நாற்காலி—மேஜைகளும் பிற சாமான்களும தூள் பறந்தன. இருகோஷ்டிகளையும சார்ந்த தலைவர்கள் 'தப்பிச்சோம்பொழச்சோம்' என்று வரிந்து கட்டிக் கொண்டு தலைதெறிக்க ஓடினர்.

இதே போன்று, கடந்த வியாழனன்று நடந்த மஞ்சேரிகொண்டோட்டி வட்டார இளைஞர் காங்கிரஸ் கமிட்டி தேர்தல்களும் பயங்கரக் கலகத்தில் முடிந்தன. பெருந் தலைமன்னு என்ற இடத்தில் நடந்த மோதலில் ஒரு தலைவருக்கு 2 பற்கள் உடைந்து போயினவாம்.

### இளைஞர் காங்கிரசுக்குள்ளேயே

மலபார் பகுதிகளில் நடக்கும் இளைஞர் காங்கிரஸ் கமிட்டித் தேர்தல்கள் பலாத்காரச் சம்பவத்திலும் குழப்பத்திலும் வெளிகடபபு, ராஜினமா மற்றும சண்டைகளிலும முடிகின்றன.

இங்கு நடக்கும் மோதல்கள்— இளைஞர் காங்கிரசுக்குள்ளேயே இருக்கும் இரு

[2-ம் பத்தி பார்க்க)

தீக்கதிர்

# காங்கிரஸ் கட்சியின் நெருக்கடி

சென்ற பார்லிமெண்ட் கூட்டம் டிசம்பர் மாத இறுதியில் முடிவடைந்தபோது, பார்லிமெண்ட் சீக்கிரமே கலைக்கப்பட்டு மறுதேர்தல் நடத்தப்படுமென்ற பேச்சு பலமாக இருந்தது. பொருளாதார நெருக்கடியும், அது விளைவிக்கும் பொதுமக்களின் எதிர்ப்பும், மேலும் அதிகரிக்கும் முன்பு சட்டு புட்டென்று ஒரு பொதுத் தேர்தலை நடத்தி, காங்கிரஸ் கட்சியை மீண்டும் நாடெங்கும் பதவியில் உறுதிப்படுத்திக் கொள்ளலாமென்று, பிரதமர் இந்திரா காந்தி கணக்குப் போடுவதாக கோஷங்கள் கிளம்பின. வாக்காளர் பட்டியல்களும் வேகமாகத் தயாரிக்கப்பட்டன.

ஆனால், இந்த "திடீர் தேர்தல்" பேச்சு, தற்போது சற்று ஓய்ந்துள்ளது மாதிரி தோன்றுகிறது. அதற்கு மாறாக பழைய பார்லிமெண்டே 3 மாத பட்ஜெட் கூட்டத்திற்கு பிப். 17-ந் தேதி டெல்லியில் கூடுகிறது. காங்கிரஸ் கட்சியின் நிலைமையே இன்று ஒரு பொதுத் தேர்தலை சந்திக்கும் நிலையில் இல்லை என்ற கணிப்பு இவ்விஷயத்தில் புனராலோசனைகளைத் தூண்டியிருக்கலாம்.

இன்று பத்திரிகைகளைப் பிரித்துப் பார்த்தால், அன்றாடச் செய்திகளில் காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்டுள்ள பூசல்களும், காங்கிரஸ் ஆட்சிக்கும் அதன் கொள்கைகளுக்கும் நாடெங்கும் ஏற்பட்டுவரும் எதிர்ப்பும், முக்கியமான இடம் பெறுவதைப் பார்க்கலாம், இது ஏதோ ஒரு இடத்திலோ, ஒரு மாநிலத்திலோ, நடக்கும் விஷயமாக இல்லை. இந்தியா முழுவதும் காங்கிரஸ் கட்சிக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியாக காட்சியளிக்கிறது.

பீகார் மாநிலத்தில், முதலமைச்சர் கபூரை பதவியிலிருந்து விரட்ட வேண்டுமென்று பெருவாரியான காங்கிரஸ் எம் எல் ஏக்களே கூப்பாடு போடுகின்றனர். சட்டசபையையே கலைத்துவிடவேண்டும், மக்கள் நம்பிக்கையை இழந்துள்ள மந்திரி சபையே தொலைய வேண்டும் என்று, வெகுஜன இயக்கம் நடந்துவரும் பின்னணியில் இந்தக் கோஷ்டிச் சண்டை பீகாரில் நடக்கிறது. அந்த இயக்கத்தை நசுக்க காங்கிரஸ் ஆட்சி கையாண்ட தடியடிகள் துப்பாக்கிப் பிரயோகம் முதலியன எல்லையற்ற மக்கள் எதிர்ப்பைக் கிளப்பியுள்ளது.

குஜராத் மாநிலத்தில் மக்கள் இயக்கத்தினால் மந்திரி சபை கவிழ்ந்தது. பிறகு இந்திரா காந்தி ஆசியுடன் அமைக்கப்பட்ட மந்திரி சபையும் கலைக்கப்பட்டது. அங்கு ஜனாதிபதி ஆட்சி நடக்கிறது. தேர்தலை நடத்த காங்கிரசுக்கு அங்கே நம்பிக்கையில்லை.

மேற்கு வங்கத்தில். கொடிய அடக்குமுறையையும் தேர்தல் மோசடிகளையும் கையாண்டு ஆட்சிக்கு வந்த காங்கிரஸ், பெரு மெஜாரிட்டியுடன் இருப்பினும், இருபெரும் கோஷ்டிகளாக தீவிரமான சண்டையில் காலந்தள்ளி வருகிறது. காங்கிரசுக்குள் இருக்கும் ஊழல்களை எதிர்க்க காங்கிரசிலேயே ஒரு கோஷ்டி திரண்டுள்ளது. கட்சி இரண்டு பட்டிருக்கிறது.

கேரளத்தில், இளைஞர் காங்கிரசுக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் சண்டை. இளைஞர் காங்கிரசு இரு கூறுகி, காங்கிரஸ் கட்சியின் ஒரு சாரார் ஒரு கோஷ்டியையும், மற்றொரு சாரார், இன்னொரு கோஷ்டியையும் ஆதரிக்கின்றனர், சண்டை கடுமையாகி வருகிறதாம். காங்கிரஸ் தலைவரும் போலீஸ் மந்திரியுமான கருணாகரன் காங்கிரஸ்மேலிடத்தில் முறையிட டெல்லிக்கு பறந்து போயிருக்கிறார்.

மகாராஷ்டிரா காங்கிரஸ் முதலமைச்சர் வி. பி. நாயக்குக்கு கல்தா கொடுக்கவேண்டுமென்று விவசாய மந்திரி சவாண் தலைமையில் அங்கு ஒரு கோஷ்டி வலுவாகக் கிளம்பியிருக்கிறது.

மத்தியப் பிரதேஷ் காங்கிரசில் கடந்த ஒரு வருடத்திற்கு மேலாகவே கோஷ்டிச் சண்டைகள் உண்டு இப்போது ஜபல்பூர் தொகுதி லோகசபை உபதேர்தலில் காங்கிரஸ் வேட்பாளரை எதிர்த்து காங்கிரஸ்காரரே வேலை செய்து தோல்வியுறச் செய்தனர். அங்கும் முதலமைச்சர் சேத்தி ராஜினமாக் கடிதத்தை நீட்டியிருக்கிறார்.

பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரபிரதேசம், கர்நாடகம் முதலிய மாநிலங்களில காங்கிரஸ் கடசிக்குள்ளேயே குரூப்புகள் வேலை செய்ததோடு எதிர்க்கட்சிகள் தொடுக்கும எதிர்ப்பும், மக்களின எதிர்ப்பும் தொடர்ந்த பெரும் பிரச்னைகளாக உள்ளன. அஸ்ஸாமமாநிலத்தில் இரண்டாயிருக்கிறது காங்கிரஸ். ஒரிசாவில் வலது கம்யூனிஸ்டுகளின் ஆதரவுடன் மிகக்குறுகிய மெஜாரிட்டியுடன் காலந்தள்ளி வருகிறது. தமிழகததில் இந்திரா காங்கிரஸ் இரவல் காலில் தான் நிறக வேண்டும்.

காங்கிரக்குள் வலதுகம்யூனிஸ்டுகளுடன் உறவுபற்றிசர்ச்சையும்நடக்கிறது. பெருந்தலைகளே மோதிக்கொள்கின்றன. காங்கிரஸ் கொள்கையை ஆதரிக்கும் வலது கம்யூனிஸ்ட் ஆதரவைப் பெற்றாலென்ன என்று இந்திரா காந்தி கேட்க மறுநாளே அந்த உறவு உதவாது என்று ஜெகஜீவன்ராம் பதிலளித்திருக்கிறார்.

ஜெயப்பிரகாஷ் இயக்கத்தை எதிர்த்தொழிக்க வேண்டுமென்று காங்கிரஸ் கட்சி தீர்மானம் போட, சில முக்கிய காங்கிரஸ் தலைவர்கள் ஜெயப்பிரகாஷை இந்திரா காந்தி அழைத்துப் பேசி சமரசம் காணவேண்டுமென்று வற்புறுத்தியிருக்கின்றனர்.

மக்களின் பிரச்சினைகள், பிரஜா உரிமைகள் பொருளாதாரக் கோரிக்கைகள் இவற்றிலெல்லாம் காங்கிரஸ் ஆட்சி அனுசரித்து வரும் மக்கள் விரோதக் கொள்கைகளும், அடக்குமுறைகளும் காங்கிரசுக்கு எதிராக மக்களின பல்வேறு பகுதிகளை ஒன்றுபடுத்திப் போராட்டங்களில் திரட்டி வருகின்றன. இக்கொள்கைகள் மாறுதவரை மக்களின எதிர்ப்பும் ஓயாது. காங்கிரஸ் நெருக்கடியும் தீராது; இறுதியில் காங்கிரஸ் கட்சிக்கு மாற்றாக இடதுசாரி, ஜனநாயக ஆட்சி: ஏற்படும் வரை மக்களின் போராட்டங்களும் தொடரும் என்பதே இன்றைய நிலைமை.

## ஆந்திர சட்டசபையில் வெளிநடப்பு

ஹைதராபாத், பிப். 12—

ஆந்திர சட்டமன்றத்தில் எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த அனைத்து உறுப்பினர்களும் நேற்று (செவ்வாய்) வெளிநடப்புச் செய்தனர்.

திட்டத்துக்கு வேண்டிய நிதியைத் தேடும் வகையில் வர்த்தகப் பயிர் உற்பத்தி மீது புதியவரிகளை ஆந்திர காங்கிரஸ் அரசு போடுகிறது.

இந்தப் புதிய வரி விதிப்பிலிருந்து 2 ஹெக்டர் (சுமார் 5 ஏக்கர்) வர்த்தகப் பயிர் நிலமுள்ளவர்களுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் கோரின. இக்கோரிக்கை ஏற்கப்படாததால் அனைத்து எதிர்க் கட்சி உறுப்பினர்களும் வெளிநடப்புச் செய்தனர்.

# தி. மு. க. அரசின் போக்குக்கு சி. ஐ. டி. யூ. கண்டனம்

## ஒற்றுமை உருவாக்க அரசு ஊழியர்கட்கு கோரிக்கை

மதுரை, பிப். 14—

தமிழக அரசின் தலைமை செயலக ஊழியர்கள் சங்க அங்கீகாரத்தை ரத்துச் செய்துள்ள தமிழக அரசின் போக்குக்கு தமிழக சிஐடியூ தலைவர் தோழர் கே ரமணியும், பொதுச் செயலாளர் தோழர் ஆர் உமாநாத்தும் கடும் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

அவர்கள் விடுத்துள்ள அறிக்கையில் ஒற்றுமையை ஏற்படுத்தி அரசாங்கத்தின் அடக்குமுறையை எதிர்த்து உடைததெறிய முன் வர வேண்டும் என்று அரசு ஊழியர் அனைவருக்கும் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

அந்த அறிக்கை வருமாறு:—

விலைவாசி உயர்வுக்கேற்ற பஞ்சப்படி உயர்வு வேண்டும் என்ற நியாயமான கோரிக்கைக்காக போராட முன் வந்துள்ள அரசு ஊழியர்களை தமிழக அரசு பழிவாங்கத் துவங்கியிருப்பது மிகவும் கண்டிக்கத் தக்கதாகும்.

தலைமைச் செயலக ஊழியர் சங்க அங்கீகாரத்தை வபஸ் பெற்றிருப்பதுடன், அரசு ஊழியர் சங்க நடவடிக்கைகக் குழு தலைவர் மீதும் ஒழுங்கு நடவடிக்கைமேற்கொள்ளப்பட்டுள்ளது. அரசால் ஏமாற்றப்பட்டு, போராட்டத்தைத் தவிர வேறுவழியில்லை என்ற முடிவுக்கு வந்துள்ள அரசு ஊழியர்களை மிரட்டுவதற்கான முயற்சியேயாகும் இது. இந்த சலசலப்பைக் கண்டு, அரசு ஊழியர்கள் அஞ்சிவிடப் போவதில்லை. அங்கீகார வாபஸிற்குப்பிறகு, மேலும் தீவிரமாகப்போராட முடிவு செய்துள்ள அரசு ஊழியர்களை பாராட்டுகிறோம்.

### ஒரே தலைமை உருவாக்குக

அரிசி மொத்த வர்த்தகம் முழுவதையும் மேற்கொண்டு, கட்டாயரேஷன் மூலம், தமிழக மக்களுக்கு மலிவு விலையில் உணவுதான்யம் சப்ளைசெய்வதற்கான அதிகாரம் தமிழக அரசுக்குள்ளது. நிலப்பிரபுக்களை கொழுக்க வைப்பதற்காக, அந்த அதிகாரத்தைப் பயன்படுத்த மறுக்கும் தமிழக அரசுக்கு விலைவாசி உயர்வால் பாதிக்கப்பட்டுள்ள அரசு ஊழியர்கள் கோரிக்கையை மறுக்கவோ அல்லது, சட்டம், ஒழுங்குபற்றி பேசவோ என்ன தார்மீக நியாயம் உள்ளது?

போராட்டப் பாதையை மேற்கொண்டுள்ள அரசு ஊழியர்கள் தங்களுக்குள் பரிபூரண ஒற்றுமையை ஏற்படுத்திக்கொள்ளவேண்டியதுஉடனடியானதவிர்க்க முடியாத கடமையாகும். ஒற்றுமை ஒன்றே அரசின் அடக்குமுறையை எதிர்த்து உடைபபதற்கான ஒரே சிறந்த ஆயுதமாகும். கூட்டு போராட்டத் தலைமையை உருவாக்கிக் கொள்ளுமாறு அரசு ஊழியர்களையும ஆசிரியர்களையும் வேண்டிக் கொள்கிறோம்.

போராடும் அரசு ஊழியர்களுக்கு ஆங்காங்கே சகல உதவிகளையும் செய்யுமாறு எல்லா சி ஐ டி யூ சங்கங்களையும்வேண்டிக்கொள்கிறோம்.

### ஆசிரியர் கூட்டணி

தலைமைச்செயலகஊழியர் சங்கத்தின்அங்கீகாரம் ரத்து செய்யப்பட்டது அதிர்ச்சி அளிக்ககூடியதாகும் என்றும், உடனே மீண்டும் அங்கீகாரம் அளிக்க வேண்டும் என்றும் தமிழ்நாடு ஆசிரியர் கூட்டணிச் செயலாளர் செ முத்துச்சாமி எம் எல் சி ஓர் அறிக்கையில் கூறியுள்ளார்.

'பொங்கல் பரிசு' என்று அரசு அளித்தது செயலக ஊழியர்களுக்கு எவ்வித நிவாரணமும் அளிக்கவில்லையென்றும், அரசு ஊழியர்கள் மற்றும் ஆசிரியர்களின் கோரிக்கைகளை ஏற்று பஞ்சப்படி பாக்கிகள் அனைத்தையும் வழங்கவேண்டும என்றும் வற்புறுத்தியுள்ளார்கள்.

### சென்னை தொழிற் சங்க கவுன்சில்

சங்க அங்கீகாரத்தை ரத்துச் செயதுள்ள மாநில அரசின் நடவடிக்கையை ஆத்திரமூட்டுவதும் ஒருதலைபட்சமானதும் தொழிற்சங்க உரிமைகளை மறுப்பதும் ஆகும் என்று சென்னை தொழிற்சங்க கவுன்சில் குறிப்பிட்டுள்ளது.

சங்க அங்கீகாரத்தை மீண்டும் வழங்கக் கோரியும் நியாயமான கோரிக்கைகளை ஏற்கும்படியும் முதலமைச்சருக்கு இக்கவுன்சில் வேண்டிக் கொண்டுள்ளது.

பஞ்சப்படி:

## திசை திருப்புவதாக முதலமைச்சர் மீது குற்றச்சாட்டு

மதுரை, பிப். 14—

பஞ்சப்படி விஷயத்தில் 'அரசு ஊழியர்கள் கேட்கும் தொகையை, பொதுமக்கள் சம்மதித்தால் கொடுக்கிறேன்' என்று முதலமைச்சர் செய்தியாளர்களிடம் கூறியிருப்பது "திசை திருப்பும் வேலையாகும்" என்று மதுரை மாவட்ட என்.ஜி ஓ. சங்கத் தலைவர் திரு. செ. இராசா ஓர் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

ஏறுகின்ற விலைவாசியோ இறங்கவில்லை. இறங்கும் என்ற நம்பிக்கை துளியும் இல்லை.

எனவே, எச்சரிக்கை விடுவதையும், திசை திருப்பும் வேலையையும் விட்டு விட்டு பஞ்சப்படி பாக்கிகளை உடனே ரொக்கமாக வழங்க விரைந்து செயல்பட வேண்டுமாயும் அவர் அரசைக் கேட்டுக் கொண்டுள்ளார்.

## சர்வகட்சி நெசவாளர்கள் 'கெரோ' அர்த்தால்

ஆண்டிபட்டி, பிப். 14—

பெரியகுளம் தாலுகா சக்கம்பட்டியில் அனைத்துக் கட்சிகளையும் சார்ந்த நெசவாளர்கள் வருகிற 17ந் தேதியன்று அர்த்தால் செய்து ஆண்டிபட்டி பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தை அன்று காலை 10 மணிமுதல் 'கெரோ' செய்கிறார்கள்.

மலிவு விலையில் உணவுப் பொருள், குழந்தைகளுக்கு இலவசக் கல்வி, கஞ்சித் தொட்டி திறத்தல், குடிநீர் வசதி, வீட்டுவரி ரத்து, தேங்கிக் கிடக்கும் துணியை அரசே கொள்முதல்செய்து உடனே பணம் பட்டுவாடா செய்தல், வறட்சி நிவாரண பணியில்நெசவாளர்களுக்கு முதலிடம் ஆகிய கோரிக்கைகள் வற்புறுத்தப்படுகின்றன.

இப்போராட்டத்தை நடத்துவதற்கு தலைவராக மா. அண்ணமலை (மார்க்சிஸ்ட்), செயலாளராக ந. மு. சுப்ரமண்யம (அதிமுக), துணைச் செயலாளராகஎஸ். சுப்ரமண்யம் [இந்திய கம்யூ], பொருளாளராக ஆர். எம். சுப்ரமண்யம் (ஸ்தா காங்), துணைப் பொருளாளராக வே மாரிமுத்து (மார்க்சிஸ்ட்) அடங்கிய போராட்டக் குழு அமைக்கப்பட்டது.

## அடிபடை உரிமைகளைக் காப்போம்

# மே.வங்க அரசியல் பிரமுகர்கள் தலைவர்கள் தூளுரை

கல்கத்தா, பிப். 8—

மேற்கு வங்க காங்கிரஸ்கட்சியும், ஆட்சியும் மக்களது உரிமைகளைப் பறித்து ஜனநாயகத்தைப் படுகொலை செய்துவருவது தெரிந்ததே. இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்துவதற்காகப் பொதுமக்களும், எதிர்க் கடசித் தலைவர்களும், ஒரு மாநாடு நடத்துவதென்று தீர்மானித்துள்ளார்கள்.

மேற்கு வங்க மாநிலத்தில, எதிர்க்கட்சிகள் அரசியல் பணிகளைச்செய்ய முடியவில்லை. ஜீவாதார உரிமைகள் மறுக்கப்படுகின்றன. எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த ஊழியர்கள் அவர்களுடைய குடியிருப்புகளில் வசிக்கமுடியாமல், துன்புறுத்தப்படுகிறார்கள்.

தொழிற்சங்கங்களை குண்டர்கள் தாக்கிக் கைப்பற்றுகிறார்கள். தேர்தலைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். காங்கிரஸ் கட்சியைத் தவிர மற்றவர்கள் பொதுக்கூட்டங்கள் நடத்தக்கூட உரிமை மறுக்கப்படுகிறது.

### ஒன்றுபட்ட செயல் திட்டம்

சமீபத்தில், ஜனாதிபதி தேர்தலில் நின்ற திரிதீப் சௌதிரி, கல்கத்தாவில் ஒரு கூட்டத்தில் பேசச் சென்றார். காங்கிரஸ் குண்டர்கள் அவரைப் பேசவிடாமல் செய்து தடுத்து விட்டனர். இப்படி எதிர்க் கட்சிகள் கூட்டம் நடத்தக் கூட உரிமை இல்லாமல் போய்விட்டது. எதிர்க்கட்சி ஊழியர்களை, எந்தவித விசாரணையுமின்றி அவசரச்சட்டம், பாதுகாப்புச் சட்டம் என்று கூறிச் சிறையில் அடைக்கிறார்கள்.

இன்று, மக்களோ, எதிர்க்கட்சிகளோ, எந்தவித உரிமையும் இன்றி அடக்கி ஒடுக்கப்படுகிறார்கள் இந்த நிலைமையை மாற்றி, அரசுக்கு மக்களின் ஒன்றுபட்ட எதிர்ப்பை காட்ட மேற்கு வங்கத்திலுள்ள அரசியல் பிரமுகர்கள், தனிப்பட்ட நபர்கள் ஆகியோர் ஒன்றுகூடி ஒரு செயல் திட்டத்தை உருவாக்கியுள்ளனர்.

### மாநாடு

இத்திட்டத்தின்படி, வெகுசீக்கிரத்தில் ஜனநாயக உரிமைகளைப்பாதுகாக்கவும் நேர்மையான சுதந்திரமான தேர்தலை நடத்தவும் கோரி பொதுமக்களைக் கொண்ட ஒரு மாநாடு நடத்த முடிவு செய்துள்ளனர்.

இந்த மாநாடு நடத்த பொதுமக்களின் ஆதரவை வேண்டி விரும்பி விடுத்துள்ள அறிக்கையில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் ஜோதிபாசு, மற்றும் அசோக், கோஷ் மக்கன்பால் பிமான்மித்ரா, அசோக்தாஸ் குப்தா, பி சி. சென், ஹரிபாத பாரதி ஆகியோர் கையொப்பமிட்டுள்ளனர்.

## ஆசிரியர் கூட்டணி உண்ணாவிரத அறிவிப்பு

மதுரை, பிப் 14—

மதுரை மேற்குப் பஞ்சாயத்து யூனியன் பொதுப் பணியாளர்கள் கூட்டுறவு நாணயச் சங்கத்தின் நடைமுறையில் உள்ள குறைபாடுகளை நீக்கக்கோரி வருகிற 22-ந் தேதியன்று இவ் வட்டார ஆசிரியர் கூட்டணி உண்ணாவிரதப் போராட்டம் நடததுகிறது.

முதல் கட்டமாக நடக்கும் இப்போராட்டத்தில் ஆசிரியர் கூட்டணியின் செயற்குழு உறுப்பினர்கள் கலந்து கொள்வர்.

கடன் வழங்குதல், உறுப்பினர் சேர்த்தல் முதலியவற்றில் பல குறைபாடுகள் உள்ளதாகவும் அவற்றைப் போக்க கூட்டுறவுச் சங்கத் தலைவரும், செயலாளரும் தக்க நடவடிக்கைகள் எடுக்காமலிருந்து வருவதாகவும் புகார்கூறப்படுகிறது.

## இந்தியா அணுகுண்டு தயாரிக்க வேண்டுமாம்!

புதுடில்லி, பிப். 11—

"இந்தியா உடனடியாக அணுகுண்டுகளைத்தயாரிக்க வேண்டும்" என்று காங்கிரஸ் எம்.பி.யான கிருஷ்ண காந்த் கூறியுள்ளார்.

பாகிஸ்தான், "அணுகுண்டுதயாரிப்பேன்" என்று பயம் காட்டி, அமெரிக்காவிடமிருந்து சலுகை பெறுகிறது. இதனை முறியடிக்க இந்தியாவும் அணுகுண்டு தயாரிக்க வேண்டும என்று கிருஷ்ணகாந்த் காரணம் கூறியுள்ளார்.

கோடிக்கணக்கான மக்களுக்கு அரை வயிற்றுக்கஞ்சிககு வழியில்லை.

இலட்சோப லட்சம் இளைஞர்கள், வேலை, வேலை என்று வீதியிலே பவனி வருகிறார்கள்.

இந்த நிலைமையைப் போக்க உருப்படியான நடவடிக்கைகளை மேற்கொள்ளாமல் கோடிக்கணக்கான ரூபாயைச் செலவு செய்து அணுகுண்டு தயாரிக்க வேண்டுமாம்! கிருஷ்ண காந்த் கூறுகிறார்.

கிருஷ்ணகாந்த் இளம் துருக்கர்......? காங்கிரசுக்குள் முற்போக்குவேறு......?

## கைதான அரசு ஊழியர்கள் விடுதலை வழக்கு வாபஸ்

திருவனந்தபுரம், பிப். 14—

கேரள முதலமைச்சர் அச்சுதமேனனுக்கும், அரசு ஊழியர் போராட்டக் குழுவுக்குமிடையே நடந்த பேச்சுவார்த்தையில் ஒப்புக் கொண்டபடி கைதான அரசு ஊழியர்கள் அனைவரும் உடனே விடுதலை செய்யப்பட்டனர்.

அரசு ஊழியர்கள் மீதான வழக்குகள் அனைத்தும் வாபஸ் பெறப்பட்டன. ஆனாலும் வன்முறை, சொத்துக்களுக்குச் சேதம் விளைவித்தல, விசுவாச ஊழியர்களுக்கு தொந்தரவு கொடுத்தல், பெண் ஊழியர்களை அவமதித்தல் என்ற குற்றச்சாட்டுக்களின் பேரில் உள்ள வழக்குகள் மட்டும் வாபஸ் பெறப்பட மாட்டாதாம்.

கோரிக்கைகள் சம்பந்தமாக இம்மாதம் 18ந் தேதிக்குப் பிறகுதான் அரசு இறுதி முடிவு எடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தங்களது கோரிக்கைகள் சம்பந்தமாக முடிவு எடுக்க ஒரு வார கெடு அளிக்கும்படி அச்சுதமேனன் கோரிய தன்பேரில் தான் அரசு ஊழியர்கள் தற்காலிகமாகவேலை நிறுதத போராட்டத்தை நிறுத்தி வைத்துள்ளனர்.

## ஏப். 12-ந் தேதி போர்ச்சுக்கல் தேர்தல்

லிஸ்பன், பிப், 12—

போர்ச்சுக்கல்லில், 50 ஆண்டுகளுக்குப்பிறகு, வருகிற ஏப்ரல் மாதம் 12-ந்தேதியன்று தேர்தல் நடக்கும்.

இத்தகவலை அந்நாட்டின் குடியரசுத் தலைவர் பிரான்சிஸ்கோ டா கோஸ்டா கோம்ஸ் கடந்த திங்களன்று அறிவித்தார்.

## பிப்ரவரி 26-ல் கோரிக்கை தினம் கொண்டாடுக!

### அகில இந்திய ரோடு போக்குவரத்து தொழிலாளர் சம்மேளனத்தின் அறைகூவல்

அகில இந்திய ரோடு போக்குவரத்து தொழிலாளர் சம்மேளன நிர்வாகிகள் கூட்டம் 14. 12. 74-ல் நடந்தது. அக்கூட்டத்தில் அகில இந்திய ரோடு போக்குவரத்து தொழிலாளிகளின் கோரிக்கைகளை விளக்கி பிப்ரவரி 26-ல் பொதுக் கூட்டங்கள்-ஆர்ப்பாட்டங்கள் நடத்துவது என்றும், தொழிலாளர் பிரதிநிதிகள் பெருந்திரளாகச் சென்று கோரிக்கைகளை நிர்வாகத்திடம் கொடுப்பது என்றும் முடிவு செய்தது.

எனவே, இந்த கோரிக்கை தினத்தை சம்மேளன முடிவுப்படி 26. 2. 75 அன்று சிறப்பாக நடத்திடுமாறு சி. ஐ. டி. யூ. சங்கங்களை கேட்டுக் கொள்கிறோம்.

மதுரை
14—2—75

தோழமையுள்ள
ஏ. நல்லசிவன்
செயலாளர்.

## எஸ். எப். ஐ. தலைவர்கள் மீது காங். குண்டர்கள் வெறித் தாக்குதல்

### போலீஸ் உடந்தை

24-பர்கானு, பிப் 14—

மேற்குவங்க மாநிலத்தில் மாணவர் காங்கிரஸ் குண்டர்களும் ரவுடிகளும், போலீஸ் உதவியுடன், இந்திய மாணவர் சங்க (எஸ் எப் ஐ) தோழர்கள் மீது தொடர்ந்து கொலை வெறித் தாக்குதல் நடத்தி வருகின்றனர்.

இம்மாதம் 4, 5 ஆகிய இரு நாட்களிலும், டைமண்ட ஹார்பரில் (24 பர்கானு மாவட்டம்) உள்ள ஃபாகிசாந்த் கல்லூரி எஸ் எப் ஐ மாணவர்கள் மீது காங்கிரஸ் மாணவர் அமைப்பான சத்ரபரிசக் குண்டர்களும வெளியிடங்களிலிருந்து ரௌடிகளைக் கொண்டு வந்தும் கொலை வெறித் தாக்குதல் நடத்தியுள்ளனர்.

பயங்கரமான ஆயுதங்களின் தாக்குதலுக்கு ஆளான தோழர்கள் துபான் பண்டாரி, மிலன்கோஷ் ஆகிய இருவரும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர். மற்றும் தோழர்கள் அரவிந்த், பண்டாரி, ஷஹித் மொல்லா, சுபாஷ் ஹல்தார், அருண்கோஷ் உட்பட ஏராளமானோர் படுகாயமடைந்துள்ளனர்.

இக்கல்லூரியிலும், மற்ற பள்ளிகளிலும் உள்ள மாணவர் பேரவை எஸ் எப் ஐ தலைமையில் இயங்கி வருகின்றன. இனி வரும் தேர்தல்களிலும் எஸ் எப் ஐ யே வெற்றி பெறும் என்பது உறுதியாகி விட்டது.

இதனால் ஆத்திரமும், பொறாமையும் கொண்ட ஆளும் காங்கிரஸ் மாணவர்கள் இத்தகைய பலாத்கார நடவடிக்கைகளில் இறங்கியுள்ளனர்.

இத்தாக்குதல் நடக்கவிருப்பதை முன்கூட்டியே அறிந்த எஸ் எப் ஐ தோழர்கள், போலீசுக்கும் முன்கூட்டியே தகவல் கொடுத்து பாதுகாப்புக் கோரியிருந்தனர். ஆனால் போலீசார் எவ்வித நடவடிக்கையும் எடுக்காது இருந்து, ரவுடிகளுக்கு உதவி புரிந்தனர்.

கொலை வெறித் தாக்குதலையும் போலீசின் இந்த நடவடிக்கையையும் கண்டித்து 5-ந் தேதியன்று மாணவர்கள் வேலை நிறுத்தமும், பெரும் ஊர்வலமும் நடத்தினர். ஊர்வலம் முடிந்து வீட்டுக்குத் திரும்பும் போதும சில மாணவர்கள் மீது காங்கிரஸ் குண்டர்கள் தாக்குதல் நடத்திக் காயப்படுத்தியுள்ளனர்.

## ஆறு எம்.பி.களுக்கு காய்ச்சல் சந்திரசேகர் மீது பாய்ச்சல்

புதுடில்லி, பிப். 13—

ஜெயப்பிரகாஷ் நாராயண் எழுப்பியுள்ள பிரச்னைகள், நாட்டில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் அடிப்படைப் பிரச்னைகள் என்றும், இதற்கு ஆளும் கட்சியால் மாத்திரமே தீர்வு கண்டுவிட முடியாது என்றும், ஆகவே ஜெயப்பிரகாஷ் நாராயணையும் இதர எதிர்க் கட்சிகளின் தலைவர்களையும் பிரதமர் இந்திரா காந்தி அழைத்துப்பேச வேண்டுமென்றும் காஙகிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர் சந்திரசேகர் எம். பி. பேசினார் அல்லவா! அதுபோன்றே மந்திரி மோகன்தாரியாவும் பேசினார் அல்லவா!

இவர்கள் இவ்வாறு பேசியது கட்சியின் கட்டுப்பாட்டை மீறிய செயலாகுமென்றும், அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் ஆத்திரமுடன் ஆறு எம்.பி.கள் அறிக்கை விட்டிருக்கிறார்கள்.

சந்திரசேகர் இம்மாதிரி பேசியதால் ஏகபோக முதலாளிகளும், வலதுசாரிக் கட்சிகளும், ஜெயப்பிரகாஷ் நாராயணின் புதிய பாசிஸ்ட் இயக்கமும் அவருக்கு விளம்பரம் கொடுப்பதாகவும் குற்றம் சாட்டியிருக்கிறார்கள்.

கூட்டறிக்கையில் சதபால் கபூர், கே. பி. உன்னி கிருஷ்ணன், சசிபூஷண், எச். டி. மாளவியா, நாவல கிஷோர் சர்மா, வயலார் ரவி முதலியோர் கையெழுத்திட்டுள்ளனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.